18th August 1960]

*Hospital at Gingee*

* 250 *Q.*—SRI K. GOPALA KOUNDER : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) செஞ்சியில் உள்ள ஆஸ்பத்திரிக்கு நோயாளிகள் அதிகம் பேர் வருவதால் இன்னும் ஒரு வார்டு கட்டும்படி தென்னாற்காடு ஜில்லா மெடிகல் ஆபிசர் சிபாரிசு செய்துள்ளாரா ?

(ஆ) அதன்பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The matter is under consideration.

**SRI K. GOPALA KOUNDER :** செஞ்சி சர்க்கார் ஆஸ்பத்திரியில் பத்து 'பெட்' உள்ள வார்டு ஒன்றுதான் இருக்கிறது. ஆண்களும், பெண்களும் ஒரே வார்டில் அனுமதிக்கப்படுவதால் திரை கட்டிக் கொண்டு உடை மாற்றிக்கொள்ளவேண்டியிருக்கிறது. மறைவு என்பதே இல்லை. ஆகவே 20 பெட் வசதி உள்ள இன்னொரு வார்டு கட்டவேண்டும். பிரசவ வார்டு ஒன்றும் தனியாக ஏற்படுத்தவேண்டும். இதற்குச் சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** புதிதாக வார்டு கட்டுவதற்கான ஏற்பாடு பரிசீலனையில் இருக்கிறது. அது ஆனதும் ஆண்களுக்கு வேறு தனியாகவும், பெண்களுக்கு வேறு தனியாகவும் வார்டு ஏற்படும். பிரசவத்திற்கும் ஏற்பாடு செய்யப்படும்.

**SRI K. GOPALA KOUNDER :** அதை எவ்வளவு காலத்திற்குள் கட்டுவதற்கான ஏற்பாடு செய்யப்படும் ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** இது பற்றியெல்லாம் சிபார்சு வந்திருக்கிறது. அதற்காக பிளான், எஸ்டிமேட் எல்லாம் கேட்கப்பட்டிருக்கிறது. பிளான், எஸ்டிமேட் எல்லாம் வந்தவுடன் அதற்கு அரசாங்கத்தார் சாங்ஷன் செய்வார்கள்.

*State Film Advisory Board*

*252 *Q.*—SRI V. K. KRISHNAMURTHY (on behalf of SRI S. NAGARAJA MONIGAR) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the present members of the State Film Advisory Board and when they were nominated or elected and their term of office;

(*b*) how many of them are officials and how many non-officials; and

(*c*) the basis on which they are generally chosen?

THE HON. SRI C SUBRAMANIAM : (*a*) & (*b*) : The Board consists of 5 members, 2 officials (the Commissioner of Police, Madras, who is ex-officio Chairman of the Board and the Director